# மனிதனால்

## தனித்து நிற்க முடியாது

புகழ்பெற்ற இங்கிலாந்து எழுத்தாளர் ஜுலியன் ஹக்ஸ்லி (1887 - 1975) இறைநம்பிக்கை இல்லாதவர். மனிதனுக்கு இறைவன் தேவையில்லை என்று கருதுபவர். அவருடைய கருத்துக்குஏற்ப "மனிதன் தனித்து நிற்பவன்" (Man Stand Alone) எனும் தலைப்பில்ஒரு நூலை எழுதியுள்ளார்.

புகழ்பெற்ற அமெரிக்க அறிவியலாளர் கிரெஸ்லி மோரிஸன் என்பவர் ஜுலியன் ஹக்ஸ்லியின் கோட்பாட்டை மறுத்து "மனிதன் தனித்து நிற்பவன் அல்லன்" (Man Does Not Stand Alone) எனும் நூலை எழுதியுள்ளார் என்பது கவனத்துக்குரியது.

> "மேலெழுந்த வாரியான அறிவு மக்களை இறைவனை விட்டு விலகிச் செல்லத் தூண்டுகிறது. அறிவு வளர்ச்சி அவர்களை அவனிடம் திரும்பத் தூண்டுகிறது."

இன்று ஏராளமான மக்கள் தங்களுக்கு இறைவன் ஒருவன் தேவையில்லை எனும் கருத்தை ஏற்பவர்களாக இருக்கின்றனர். இறைவன் மீது நம்பிக்கையின்றியே அவர்கள் வெற்றி பெற இயலும் என்று கருதுகிறார்கள். நாம் இதனை சற்று ஆழ்ந்து கவனித்தால் இது ஒரு முதிர்ச்சியற்ற கருத்து என்பதை புரிந்து கொள்ளலாம். உண்மையில் இத்தகைய கருத்துக்கள் முதிர்ச்சியடையாத, 40 வயதுக்கு குறைந்த வயதுடையவர்களின் சிந்தனையில் உதித்தவையாகவே இருக்கும். உயிரியல் மற்றும் மனவியல் ஆய்வுகள் மனிதர்கள் நடுவயதை அடையும் போது தான் பக்குவம் அல்லது முதிர்ச்சி பெறுகிறார்கள் என்று கூறுகின்றன.வாழ்க்கையின் எதார்த்தம் என்னவெனில் இந்த வயதுக்கு முன் அவர்கள் தங்களை பற்றி நல்ல செம்மையான கருத்து கொள்வதற்குரிய பக்குவம் பெறுவதில்லை. இறைவனைப் பற்றி மேலெழுந்தவாரியான கருத்துக்களை உதிர்ப்பவர்கள் பெரும்பாலும் முதிர்ச்சியடை யாதவர்கள் என்று தான் கணிப்புகள் காட்டுகின்றன. முதிர்ச்சி யடையாத நிலையில் இருந்துஅறிவும் அனுபவமும் பெற்று முதிர்ச்சி அடையும் போதுஏராளமான மக்கள் இறை நிராகரிப்பாளர்களும் மதக்கோட்பாடுகளை புறக்கணித்தவர் களும் கூட இறைவனை பற்றிய விவாதத்தில் சிந்தித்து கவலையுடன் ஈடுபடத் தொடங்குகிறார்கள்.

ஒரு சிந்தனையாளர் இவ்வாறு கூறியுள்ளார் :

"மேலெழுந்தவாரியான அறிவு மக்களை இறைவனை விட்டு விலகிச் செல்லத் தூண்டுகிறது. அறிவு வளர்ச்சி அவர்களை அவனிடம் திரும்பத் தூண்டுகிறது."

இந்த உண்மையை புலப்படுத்தும் சில எடுத்துக்காட்டுக்கள்

ஒரு வியாபாரி புதிதாக வணிக நிறுவனம் ஒன்றை தொடங்கிய சில காலத்திலேயே அது நல்ல முறையில் வளர்ந்து பெருகி நிர்வகிப்பது கடினம் என்ற நிலையை அடைகிறது. சில தனிப்பட்ட வரையறைகள். அவருடைய ஆர்வங்களையும் விருப்பங்களையும் நிறைவேற்றுவதற்கு தடையாக விளங்கின. தன்னுடைய கனவுகளுக்கு பரிந்து விரிந்த ஓர் உலகம் தேவை என எண்ணுகிறார். பிறகு அந்நிலையை அடைந்ததும் அதைவிட மிகப் பெரிய அதிகாரம் படைத்த ஒன்று உள்ளது என்றும் அதன் உதவியின்றி தம்முடைய திட்டங்களை எல்லாம் நிறைவேற்றுவது சாத்தியமல் என்றும் உணர்கிறார்.

# ஒருவரின் வாழ்க்கை இலட்சியம்

இளைஞர்களில் பெரும்பாலோர் பெரும் ஆர்வங்களுடன் வாழ்க்கையை தொடங்குகிறார்கள். ஆனாலும் தங்களின் இயலாமையை மீண்டும் மீண்டும் நினைவுறுத்தும் பல அனுபவங்கள் அவர்களுக்கு ஏற்படுகின்றன. நோய், விபத்துகள், இழப்புகள், பாதகமான சூழ்நிலைகள் எல்லாம் ஏற்பட்டு வாழ்க்கை முழுவதும் நிறைவேறாத ஆர்வங்கள் நிறைந்ததாக தோன்றுகிறது. எவ்வளவு தான் செல்வ வளம் பெற்று வாழ்ந்தாலும் மனிதன் நூறு ஆண்டுகளுக்குள் அதையெல்லாம் விட்டு விட்டு இறந்து போகின்றான் என்பதை காண்கிறான். இத்தகைய கசப்பான அனுபவங்கள் எல்லாம், சின்னஞ்சிறு பிராயத்திலும் வாலிப வயதிலும் தோன்றும் ஆர்வங்கள் ஆசைகள் அனைத்தும் அறியாமையால் எழுபவையே என்பதையே காட்டுகின்றன. நாம் வாழும் நிறைவு பெறாத இவ்வுலகில் முழு திருப்தியை பெறுவது முடியாத காரியமே ஆகும்.

வாழ்க்கையின் குறிக்கோள் பணம் ஈட்டுவதாக இருந்தாலும், அல்லது புகழும் அதிகாரமும் அடைவதனாலும் அல்லது இவை போன்ற வேறு எதுவாக இருந்தாலும் சரியே. அவை குறைபாடில்லாதவை என்று சொல்லப்பட கூடியவை அல்ல. தனி மனிதன் ஒருவர் பணம், பதவி, அதிகாரம் யாவும் அடையப் பெற்றும் அவை தான் எதிர்ப்பார்த்ததை விட மிக குறைவானது எனக் கருதி திருப்தியற்றவராகவே காலந்தள்ளுகிறார். வெற்றியடைவது என்பது அதை அடையப் பெறாதது போன்று அர்த்தமற்றதாகவே தோன்றுகிறது.

இந்த வகையில், நமது தினசரி வாழ்க்கையில் திருப்தியின்மை நம் அனைவருக்கும் ஏற்படலாம். அப்பொழுது அவர்கள் ஒரு தொலைநோக்கியை எடுத்துக் கொண்டு பிரபஞ்சம் எவ்வாறு எந்த உதவியும் இல்லாமல் இயங்க முடியும் என்பதை குறித்து யோசிக்க வேண்டும்.

# இறைவன்

## உறுதியான நம்பிக்கை ஆதாரம்

இந்த பிரபஞ்சம் முழுவதையும் காணக்கூடிய வகையில் ஒரு மாபெரும் ஆற்றல் வாய்ந்த தொலை நோக்கி (Telescope) இருந்து அதன் மூலம் நோக்கினால் நாம் முதலில் காண்பது ஒரு அரிய கோளாகிய பூமியைத் தான். வாழ்வினங்கள் அறவே இல்லாத கோளங்களுக்கு இடையே இந்த சிறிய உருதுணையாக அமையும் பல்வேறு இனங்களும் இருப்பதை காண முடியும். இந்த அரிய மிக அற்புதமான காட்சி வியப்பூட்டக் கூடியவர்கள் கவர்ச்சி மிக்கதாக விளங்கும்.

பூமி அதனோடு சேர்ந்து இயங்கும் சந்திரன் மற்றும் பல கோள்கள் தொடர்ந்து சஞ்சரித்து கொண்டிருப்பதை காண்போம். பூமி அதன் ஊடச்சை (Axis) மையமாக கொண்டு சுழன்று, சூரியனை சுற்றி வருவதை காண்போம். சூரியனும் அதை சுற்றி வரும் கோள்களும் மிக விசாலமான பால் மண்டலத்தில் சுழன்று வருகின்றன. இந்த மண்டலம் வேறு பல பால் மண்டலங்கள் சார்ந்த வட்டத்தில் சுழன்று வருகின்றன.

மிக விசாலமான விண்வெளியில் சுற்றி வரும் விண்மீன்களும் கோள்களும் வியப்பு மிக்க புதுமையாக உங்களுக்கு தோன்றலாம். எண்ணற்ற பெரும் நெருப்பு பந்துகள் மிக அதிகமான வேகத்துடன் சுழன்று வருவதை காண்பீர்கள். இவைவிண்மீன்கள் என்று அழைக்கப்படுகின்றன. இந்த விண்வெளி கோள்களுக்கு இடையில் நம்முடைய பூமி ஒரு மண் துகள் அளவை விட சற்றும் பெரிதல்லாமல் காணப் பெறும். இந்த காட்சி உங்களுடைய வாழ்க்கை முற்றிலும் முக்கியம் ஏதுமில்லாததாக, விலை மதிப்பற்றதாக தோன்றுமளவுக்கு விந்தையானதாக தோன்றும். இந்த அனுபவம் உங்களை ஒரே சமயத்தில் இரண்டு உண்மைகளை கண்டுபிடிக்க தூண்டும். முதலாவதாக, இந்த பிரபஞ்சத்தின் படைப்பாளனாகிய ஒரு வல்லமை மிக்க இறைவன் இருக்கிறான். அவனே இந்த பிரபஞ்சத்தை பராமரிப்பவனும் ஆவான் என்பதாகும். பிரபஞ்சத்தின் இந்த காட்சியை நீங்கள் உங்கள் மனக்கண் முன் கொண்டு வந்தால், இப்பிரபஞ்சமே அதை படைத்தவன் ஒருவன் இருக்கிறான் என்பதற்கு சான்றாகும் என

> சில நேரங்களில் மனிதன், பதவியை அடைந்ததும் அதைவிட மிகப் பெரிய அதிகாரம் படைத்த ஒன்று உள்ளது என்றும் அதன் உதவியின்றி தம்முடைய திட்டங்களை எல்லாம் நிறைவேற்றுவது சாத்தியமல்ல என்றும் உணர்கிறார்

உங்கள் இதயம் தானாகவே உணர்ந்து கொள்ள செய்யும். இரண்டாவதாக, இப்பிரபஞ்சத்தில் நீங்கள் ஆதரவற்றவர்களாகவும், முக்கியத்துவம் இல்லாத வர்களாகவும் உணர் வீர்கள். இறைவன் இன்றி உயிர் வாழ்வதே சாத்தியமல்ல என்பதையும் அறிந்து கொள்வீர்கள். இது வாழ்க்கையின் முக்கியமான யதார்த்தம். இதைப் பற்றி ஆழச் சிந்திக்கும் போது ஒருவர் தானாகவே இறைவனின் பக்கம் திரும்புவார்.

> மனிதன் இயல்பாகவே எப்பொழுதும் இறைவனின் தேவையை உணர்ந்தவனாகவே காலம் கழிக்கிறான். இறைவன் இன்றி நம்முடைய வாழ்க்கை நிறைவு பெறாது. வாழ்க்கையில் வெற்றி பெறவும் முடியாது.

“இறைவா! எனக்கு உதவி செய்தருள், உன்னுடைய உதவியின்றி எல்லாமே தவறாகி விடும்“ என்று அவனிடம் கையேந்தி இறைஞ்சுவார்கள்.

# இறைவன்:

## வாழ்க்கை எனும் கப்பலின் மாலுமி (கேப்டன்)

இந்த பிரமாண்ட பிரபஞ்சத்தில் மனிதனுக்கு உள்ள ஒரே ஆதரவு இறைவன் மட்டுமே. இறைவனின் வழிகாட்டுதல் இல்லாமல் மனித கப்பல் கரை வந்து சேராது. இறை நம்பிக்கை மனிதனுக்கு மிக முக்கியமானது. நல்லெண்ணம் இன்றி மனிதன் என்பவன் வெறும் அற்ப ஜடம்.

மனிதன் இயல்பாகவே எப்பொழுதும் இறைவனின் தேவையை உணர்ந்தவனாகவே காலம் கழிக்கிறான். இறைவன் இன்றி நம்முடைய வாழ்க்கை நிறைவு பெறாது. வாழ்க்கையில் வெற்றி பெறவும் முடியாது.

கீழ்காணும் இந்த உதாரணத்தின் மூலம் மனிதனின் நிலையை நம்மால் சரியாக புரிந்து கொள்ள இயலும்.

நூற்றாண்டுகளுக்கு முன் அமெரிக்க கடலோரத்தில் இருந்து ஒரு கப்பல் ஆப்பிரிக்காவுக்கு புறப்பட்டது. இந்த கப்பல் ஆழ்கடலில் போய் கொண்டிருந்த போது கடுமையான புயல் காற்று வீசத் தொடங்கியது. கப்பல் ஆடவும் குலுங்கவும் ஆரம்பித்தது. பயணிகள் யாவரும் பீதியும் கிலியும் கொண்டு அலறினார்கள். இத்தகைய இக்கட்டான வேளையில் ஒரு சின்னஞ்சிறிய பெண் கப்பலில் மேல் தட்டில் ஒரு மூலையில் உட்கார்ந்து இருப்பதை ஒரு பயணி கண்டார். புயல் காற்றை பற்றிய கவலை எதுவுமின்றி அவள் தனது பொம்மைகளோடு விளையாடி கொண்டிருந்தாள். இதைப் பார்த்த அந்த பயணி, “நம்முடைய கப்பலுக்கு என்ன நேர்ந்து கொண்டிருக்கிறது என்று உனக்கு தெரியுமா?“ என்று கேட்டார். அந்த சிறுமி “என்ன விஷயம்?“ என்று திருப்பி கேட்டாள். அந்த பயணி கப்பல் புயலில் சிக்கி தவித்து கொண்டிருப்பதாக கூறினார். அந்த சிறுமி, “இந்த கப்பலின் தலைவன் யார் தெரியமா? என் தந்தை அவர் கப்பலை மூழ்க விட்டு விட மாட்டார்“ என்று பதிலளித்தாள்.

> ஆனால் அவர்களுடைய இந்த நம்பிக்கை மிகவும் வலிமை வாய்ந்தது. பேரிடர் நிகழவிருக்கும் நேரத்தில் இவர் மிகுந்த உறுதியுடன், அவருடைய வாழ்க்கை கப்பலின் தலைவன் எல்லாம் வல்ல இறைவன் என்று சொல்ல முடியும்.

அந்த சிறுமியை, அவளுடைய தந்தை மீது கொண்டிருந்த உறுதியான நம்பிக்கை, அந்த சிக்கலான வேளையில் பீதிக்கு உள்ளாவதில் இருந்தும் காத்தது. இறைநம்பிக்கையுள்ள ஒரு மனிதனின் நிலையும் இதுவே தான். அவருக்கு தன்னை படைத்தவன் எல்லாம் வல்ல இறைவன் மீது சிறு குழந்தையை போல் நம்பிக்கை உண்டு. ஆனால் அவளுடைய இந்த நம்பிக்கை மிகவும் வலிமை வாய்ந்தது. பேரிடர் நிகழவிருக்கும் நேரத்தில் இவர் மிகுந்த உறுதியுடன், அவருடைய வாழ்க்கை கப்பலின் தலைவன் எல்லாம் வல்ல இறைவன் என்று சொல்ல முடியும். எந்த சூழ்நிலையிலும் எந்த நேரத்திலும் அந்த வாழ்க்கையை மூழ்கடித்து விட மாட்டான்.

இதுவே மனிதன் தன் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டிய திட நம்பிக்கைஆகும். இறைவன் மட்டுமே அவ்வாறான திட நம்பிக்கையை மனிதனுக்கு தரக் கூடும்.

**- மவுலானா வஹிதுத்தீன் கான்**


For more information, contact : TL 5

GOODWORD

324, Triplicane High Road,
Chennai - 600 005.
☎ +91-44-4352 4599
+91 97908 53944
✉ chennaigoodword@gmail.com

goodwordbooks.com

1, Nizamuddin West Market,
New Delhi - 110 013.
✉ info@goodwordbooks.com

www.alquranmission.org • www.wkhan.net
www.alrisala.org • www.cpsglobal.org

CPS International
centre for peace & spirituality


